குமரச் சிலைவதி யமரர்க் கதிபதி
கொட்டுக சப்பாணி. (அ)

பங்கய மியாவுமெ ழுந்தெம தையநின்
பனிமதி முக நோக்கிப்
பகரி னிதற்கி டிலையா மென்று
பயத்தொடு பங்கமரீஇச்
சங்கையி லாவளி கண்ணீ ராறு
தழீஇயு மதிப்பகையாற்
றலைநா ணுறல்கொண் டிதழ்வாய் மூட
றவாதுற வெய்த்த னமா
லங்கணின் முகசா ரூபம் பெறவரு
ளாயென வொருதாணின்
றரிய வனந்தனி லுரிய தவஞ்செய
வாற்றிடு கவினுடையாய்
கொங்கலர் நீப மணிந்தபு யாசல
கொட்டுக சப்பாணி
குமரச் சிலைவதி யமரர்க் கதிபதி
கொட்டுக சப்பாணி. (௯)

தெண்டிரை நீர்நிலை யோடையி னேக்குநர்
சிந்தை கவர்ந்தெழிலிற்
றிகழெகி னம்புய முற்றந் நீரொடு
தெரியுந் தன்சாயற்
கண்டொரு பேடிது வென்று நினைப்பக்
காமுறு மாடுவாரால்
காவி நறும்பா சடையிற் றங்கிய
காமரு குருகுடனத்

தண்டிலை வாய்கொண் டார்ப்பத் தவறித்
தண்புனன் மூழ்குபெழீஇத்
தழைசிறை யுதறியுள் வெள்குறும் வளமலி
தருசோ ணாடணிசிர்
கொண்டு திகழ்திகழ் புல்லைப் புரியாய்
கொட்டுக சப்பாணி
குமரச் சிலைவதி யமரர்க் கதிபதி
கொட்டுக சப்பாணி. (கo)

சப்பாணிப்பருவ முற்றிற்று.

---

## முத்தப்பருவம்.

பத்தித்திரு மணிமாளிகை
பகலைப் * பகல் செய்யும்
பணிவெங்கயி றிட்டண் டர்கள்
பயவாரி மதிக்கும்
மத்திற்பொரு செய்குன் றொடு
மதிமாமணி வாயின்
வழியேசெல வளர்கோ புரம்
வடமேருவை நேர
வெத்திக்கும்வில் விசிப் பட
ரிரவுக்கிற வெய்த
விமையோர்தப தியுநா ணுற
வெழிலைத்தரு புல்லை
முத்தர்க்கருண் முத்திக் கிறை
முத்தந்தனை யருளே

---

* பகல் - பிளத்தல்.

முருகாதிரு மருகா வொரு
முத்தந்தனை யருளே. (க)

வேலைச்சுடர் வாளைப் பழி
விடவார்விழி மடவார்
மேருத்தன பாரத் துணை
விம்மப்பிரி கணவர்
மாலைப்புய மாவெற் பொடு
மருவற்குறு மூடன்
மதியைத்தடை புரியக் கழி
மணிசேரணி மறுகின்
பாலுற்றெருளி ரத்தி பிகை
பலவைத்தன புல்லைப்
பதிவாழ்ரு ணிதியே யுமை
பதிகாதினில் வேத
மூலப்பொரு ளுரைவாய் மணி
முத்தந்தனை யருளே
முருகாதிரு மருகா வொரு
முத்தந்தனை யருளே. (உ)

பாவாணரின் மலர்வண் டிசை
பாடுங்குயில் கூடும்
பலவின்கனி சாடுங் கவி
பசுமாமயி லாடுங்
காவார்தரு வளனும் பணை
களினேர்தரும் வாள னுங்
கனநீர்தரும் வளனும் பல
கவினுஞ் சோணாடா

கோவார்தரு குமரா சல
குமராசல முறும்வை
குந்தாவை குந்தா தியர்
குலிசன்புகழ் தேவே
மூவாமுழு முதலே யொரு
முத்தந்தனை யருளே
முருகாதிரு மருகா வொரு
முத்தந்தனை யருளே. (௯)

* ஆசைக்கரி யோடத் தனி
† யாசைக்கிரி யாட
வமராவதி யுலகோ டுபொ
னமராவதி கூட
நாசத்தினை யுறுமென் னவு
நாசத்தை யிழந்து
நமனாருயிர் தடுமா றமு
னமநாரத னயரும்
மாசைத்தவிர் வேள்விக் கிடை
வருவாயுவி னுலவும்
‡ வருடைப்பரி யிவர்புல் லைபின்
வாழ்வேயெளி மேவி
மூசக்கமழ் நீபப் புய
முத்தந்தனை யருளே
முருகாதிரு மருகா வொரு
முத்தந்தனை யருளே. (௧௦)

நந்தாவள முந்தா பதர்
நண்ணுந்தா வளமும்

---

* ஆசை - திக்கு. † ஆசை - பொன். ‡ வருடை - ஆடு.

ளிர்சந்தருண் மணநா றுநல்
வளமுந்தரு பொதிகை
மந்தானிலம் வந்தா நில
மருவிக்கடை சியர்கூழ்
மாறென்களை களையக் களை
மாற்றுஞ்சோ ணாடா
செந்தாமரை யடிமீ தணி
செந்தா * மரை வாயிற்
றிகழ்நூபுர மொடுதண் டைச்
சிலம்பத்தனி வந்து
முந்தார்மறை முதலே யொரு
முத்தந்தனை யருளே
முருகா திரு மருகா வொரு
முத்தந்தனை யருளே. (ரு)

வேறு.

கார்கொண்ட முகிலைப் பிழிந்துண் டமிழ்ந்தெனக்
கட்டுடைந் தூற்று நீத்தக்
கரடக் களிற்றுரிக் கஞ்சுகக் கிஞ்சுகக்
கனிவாய்க் கனிக்கி டந்தந்
தேர்கொண்ட செம்பவள மேனியணி வெண்ணீற்
றிரும்பொடித் தொகையி னோடெங்
கெய்துசெஞ் சீறடிப் பொடியுங் கலந்துற
விவர்ந்துவிளை யாட னோக்கி
வார்கொண்ட துத்திப் பணைப்பணி யுடன்கலா
மதிவிற் றிருந்த முடிமேல்
வளருமப கிரதி பரிந்தெடுத் திலகமடி
வைத்தணிகள் பலதிருத் திச்

---

* மரை - தவளை.

சீர்கொண்ட மகவுரிமை காட்டிமுத் தாடுபவ
திருவாயின் முத்த மருளே
சிகரவட வரைதணிய வளர்குமர மலையதிப
திருவாயின் முத்த மருளே. (கூ)

அந்தரத் தமரரொரு புடைநிற்ப வொருபுறத்
தவுணர்நின் றரவை நாணு
யார்த்துத் தரங்கஞ் சுருட்டும் பயோததி
யலம்பப் புலம்ப மேனுன்
மந்தரமெ னுங்கிரி நிறீஇமதிக் கத்தோன்றும்
வானமுதொ டஃறி ணைப்பேர்
மருடங்கோ கிலந்தத்தை யோசெய்ய கற்றுவின்
மடிகொன்று கவர முதமோ
பைந்தொடிக் குறமான் மொழிக்குவமை யாமெனப்
பகருமென் கிழவியந் தேன்
பன்னிரு செவித்துளை நிரப்பியுட் போந்துளம்
பரவவன் பேயுரு வமாய்ச்
சிந்தையொத் தவண்மணிக் கவுளின்முத் திட்டவா
திருவாயின் முத்த மருளே
சிகரவட வரைதணிய வளர்குமர மலையதிப
திருவாயின் முத்த மருளே. (எ)

சங்குறழ் மிடற்றுத் திருத்தங்கு மருமச்
சரோருகக் கண்ணா னீன்ற
தாமரைக் கண்ணனை விளித்துநின் பணியாது
சாற்றென்ன நீவி னவலும்
பங்கமற வுலகம் படைத்தலென் றொழிலெனப்
பழமறைக் காதிமனு வின்

படுபொரு ளுணர்த்தெனத் தெரியாமை கண்டுபத
பதுமத்தி னூனு தைத்து
மங்கவலை நாற்றலை குலுங்கக் கரங்குட்டி
யடுதாட் டுணைக்கு நிகள
மார்த்தச் சுறக்கந்த மாதனக் குகைதனி
லருஞ்சிறைப் பட்டு மலவே
செங்கனியு நாணப் பணித்தசெம் பவளநேர்
திருவாயின் முத்த மருளே
சிகரவட வரைதணிய வளர்குமர மலையதிப
திருவாயின் முத்த மருளே. (அ)

வேறு.

தன்னின் மிக்கோ ரிலையெனற் கோர்
சான்றும் மழுவைக் கரந்தூக்குந்
தனியில் கருணைப் பெருந்தகையாஞ்
சசிவேய் மணிவே யீன்றமுத்து
முன்னி னரிய தவநெடுநா
ளோவா தூஞற்றுந் தாபதரோ
டுகளக் கமலத் துறைமடவா
ருவக்குங் கொழுநற் கரிவரிதாய்ப்
பொன்னின் குவடுஞ் சிறுவிதியும்
புரிமா தவப்பே றெய்தியிறும்
பூதுண் டாகத் தடாதியிற்
பூந்தா மரையும் பணிலமுமீன்
கன்னி முத்து மீன்றவிளங்
காளாய் முத்தந் தருகவே
கந்தா குமர மலைக்குகந்தாய்
கனிவாய் முத்தந் தருகவே. (கூ)

4

கொம்பிற் றேனை நசைகொன் றூடக்
குலமா னிடனு மடமையினற்
கோதாட் டயர்ந்தெட் டாப்பொருளைக்
கோடற் கழுகுஞ் சிறாருமொப்ப
வம்பைப் பெருக்கும் பவஞ்சமெனும்
வாழ்விற் கிடந்து கொடுநிரய
வாழ்க்கைக் காக்கைப் பொறைநிதமும்
வளர்ப்பார் நினைப்புக் கரியநின்று
னம்பு மன்பர்க் கருட்செல்வ
நல்கிப் பெறும்பே ரின்பசுக
நாளுந் துய்ப்பக் கடைக்கணித்தா
னைவதிர் ஞானப பெருஞ்சுடரே
கம்பக் களிற்றுக் கிளையசிறு
களிறே முத்தந் தருகவே
கந்தா குமர மலைக்குகந்தாய்
கனிவாய் முத்தந் தருகவே. (௧௦)

முத்தப்பருவம் முற்றிற்று.

---

## வருகைப்பருவம்.

செங்கதி ரொளிக்கற்றை வெந்நிடக் கமலமென்
சிற்றடித் துணையின் மேய
சிற்றொலிக் கிண்கிணி மணிச்சிலம் பொளிரத்
திருக்கைவிர லாழி மின்ன
வெங்கணைக் கிழவனை யடர்க்குநின் றாதைதந்த
லக்கத் துதித்த வுணரா
மடையலரை யடையவென் றிடும்வாகை யம்புயத்
தனிவாகு வலய மிளிரப்

பொங்குமலர் முகமொடு நுதற்சுட் டியுங்கருணை
பொழிவிழிக் கடையு மோங்கப்
பொற்பவள வெற்பினிடை சூழ்மினற் கொடியுமிற்
புரையுமரை ஞாணி லங்கத்
தங்கவரை நூறத் தகர்த்தசென் டாயுதந்
தாங்குசே வகவ ருகவே
சம்புசங் கரிமதலை யின்புறுங் குமரமலை
தங்குகண் மணிவ ருகவே. (க)

ஓதரிய மறைகளு மரந்தையுற் றுந்துருவ
வொல்லாமை கண்டுமு னர்வின்
றெப்பனை செயற்கொருவ ராலுமொன் றுநினக்
கொப்பனையி யற்றல் போலப்
பேதையே முள்ளத் தவாமிக்க தன்மையாற்
பீடிலகி னன்ப ருக்கே
பிள்ளைப் பெருங்கலி துடைத்தரு ளினைச்சிறிதொர்
பிள்ளையுரு வாய மைத்து
நாதனென லாயவுனை நன்னீரி லாட்டியொன்
னறுநுதற் றிலத மிட்டு
நவமணிப் பணிகளிட் டுன்னழகு காணநனி
நாடிவா வெனவ ழைத்தேன்
சாதுசங் கம்பரவி நேயமிகு புல்லைத்
தலேசசண் முகவ ருகவே
சம்புசங் கரிமதலை யின்புறுங் குமரமலை
தங்குகண் மணிவ ருகவே. (உ)

பொன்மணி யினொளிவீசு வடிவேற் படைக்கரம்
பொலியுமணி யெப்பு வனமும்

புகழுமணி பென்சிகா மணியிருவர் நாப்பண்
பொருந்துசெம் மணிய டியராற்
சொன்மணி மறைக்குமெட் டாதமணி யீராறு
தோளுடைய மணிகொ டுங்கோற்
சூர்தடிந் தமரருக் கருடயா மணிபரம
சுகபோக ஞான மணிநீ
பன்மணி நிகர்க்குங் கருங்கட் சிவந்தவாய்ப்
பதுமாச னத்தி னோங்கும்
பச்சைப்ப சுங்கொண்டன் மார்பில ணையுந்திருப்
பாவைசீத மேவு புல்லை
தன்மணி தனக்கிணையி லாதசண் முகமணி
சதானந்த மணிவ ருகவே
சம்புசங் கரிமதலை யின்புறுங் குமரமலை
தங்குகண் மணிவ ருகவே. (௫)

கடியேறு கற்பகக் கானேறு நீரின்று
கமரேற வெங்குவ டுநேர்
கவினேறு படிவப் புழைக்கைவெள் ளிபநெஞ்சு
கரிசேற வானு டுவெங்
கொடியேறு கேதனக் கொடிசெயர சொடுகொடுங்
கோலேற வேறு மாண்மை
கொண்டபுய வெற்பமர கண்டகர்கள் குன்றுரங்
குன்றுத வுர முமேகத்
திடியேறு மஞ்சத் தரங்கவன் குணிலேறு
மெழின்மார பேரி யகடு
மீர்தரக் கூவுசெஞ் சேவலங் கொடிபடைத்
தேறுக ரவனச மலரிற்
றடியேறு கூனற் பழங்கிழமெ னப்புனந்
தன்னில்வரு சேய்வ ருகவே

சம்புசங் கரிமதலை யின்புறுங் குமரமலை
தங்குகண் மணிவ ருகவே. (ச)

* குண்டலஞ் செவியுறப் பரிதியுத யஞ்செய்து
குறுநகையு டன்வ ரத்தன்
கொண்கன்வர வெனவறிந் தம்புயக் கோதைமகிழ்
கூர்வதென முகிழ்வி ரிப்பக்
கண்டமுக் காளறுங் கொண்டல்வி யங்கோதை
கண்மூடி யேதன் மதியாங்
கணவற் றணந்தபிரி வாற்றுது சுரிமுகங்
காட்டலென வலர்மு கிழ்ப்ப
வெண்டகு தடந்திகழ் குரம்பைவா னதிசெலற்
கிட்டசோ பானமெ னவே
யிலகிய வளங்குலவு சோணுடு புகழ்புல்லை
யிறைமறைப் பொருளு மறியாத்
தண்டணிவி திக்குமொரு தண்டனைவி திக்குமுத்
தண்டனே நீவ ருகவே
சம்புசங் கரிமதலை யின்புறுங் குமரமலை
தங்குகண் மணிவ ருகவே. (ரு)

வேறு.

இந்தப் பிறவி தனிலெமக்கு
ளிருங்கட் கருணை வாராதே
லினியெப் பிறவி களினுனதா
ளிணையிற் கலப்பேங் கலவேமேற்
சிந்தத் துமிக்கும் யமபடராற்
செருக்கும் பாசந் தனைச்சுழற்றிச்

---

* குண்டலம்—ஆகாயம்.

சினமீக் கொண்டு கவரவரிற்
 செய்யுந் தொழிலொன் றறியேமா
லந்தப் பொழுதெம் மாகுலநீத்
 தருள வருக வென்னுமன்பர்க்
கன்பே வருக புல்லைநகர்க்
 கத்தா வருக வமரேசன்
சொந்தக் குமரி காமுறுமெய்த்
 துணைவா வருக பசுஞ்சூட்டுத்
தோகை விரித்து நடஞ்செய்மயிற்
 றுரங்கா வருக வருகவே. (சு)

எழுதா * வேதப் போலிதனை
 யெழுதா ரணியும் புகழ்ந்தேத்த
வேமச் சிலையேட் டொருகோட்டா
 லெழுதும் பிரானோ டகங்களிப்பப்
பொழுதார் மாலை மதிநுதற்செம்
 பொற்பூ தரத்தா யணைத்தெடுத்தும்
பொருந்த மடியாந் தொட்டிலிட்டும்
 புறனுந் தட்டி விழிதுயிற்று
முழுதா ரளிசூழ் கடம்பணிதோ
 ளும்பா வருக தகட்டிலைவேற்
குடையாய் வருக குறச்சிறுமிக்
 குறவா வருக வாதரத்திற்
றொழுதார்க் கருளும் புல்லைநகர்த்
 துங்கா வருக பசுஞ்சூட்டுத்
தோகை விரித்து நடஞ்செய்மயிற்
 றுரங்கா வருக வருகவே. (எ)

---

* வேதப்போலி—பாரதம்.

ஈமத் தாடி விதிதலையோ
டேந்திப் பணியா ரமுஞ்சமர்து
மியற்றுந் தவமா முனிமகற்கா
வியமற் றடிந்தும் மரறியாக்
காமற் காய்ந்த பெருங்கடவுள்
கல்லா லிழற்கீழ்க் கற்றவர்க்குக்
கருதற் கரிய மறைப்பொருளைக்
காட்டா நிற்கு மன்னுற்கே
மாமிக் குயர்ந்த முதன்மனுவை
வழுத்துங் குருவே வருகபுல்லை
மன்னு வருக குமரமலை
வாசா வருக வோராறு
சோமத் திருமன் டலமுகங்க
டிலங்க வருக பசுஞ்சுட்டுத்
தோகை விரித்து நடஞ்செய்மயிற்
றுரங்கா வருக வருகவே. (அ)

சுகந்த மறப்ப ருடலினர்
சொல்ல மறப்பார் சிர்கணிப்போர்
சுவர்க்க மறப்ப ரவிசயில்வார்
துன்ப மறப்ப ரின்பமுளா
ரகந்தை மறப்பர் ஞானியர்க
ளைய மறப்பர் விவேகியர்க
ளாக மறப்பர் யோகியர்க
ளமரும் புல்லைக் கிறைவருக
திகந்தந் துதிக்கக் கருணைபுரி
செவ்வேள் வருக சிவைக்குகந்த
செல்வா வருக மணிநிறத்துத்
தேகா வருக வனவரதந்

தொகுந்தோந் தொந்தோந் தொந்தோந்தொந்
தோமென் றிலகு பசுஞ்சூட்டுத்
தோகை விரித்து நடஞ்செய்மயிற்
றுரங்கா வருக வருகவே. (கூ)

பனைவா ளெயிற்றுப் பணிக்கரசும்
பதுமா சனனு நின்பேற்றைப்
பகர்தற் கரிதா மோராறு
படைவீ டமர்ந்தன் பருக்கருள்வோய்
கனைமார் குணங்கு துணங்கைகொட்டக்
களம்புக் கமரி னிணங்கமழுங்
கதிர்வேல் விடுத்துச் சூரர்பகையின்
கருவே ரறுக்க வருமுதலே
மனைமார் பொழிற்றேன் மிசைத்தளிவிண்
வழிபோஞ் சத்த மாவுடலை
மறைப்பக் கதிர்நீ ளிறப்பரியாய்
மருவற் கென்னே வெனவயிர்ப்பத்
துணர்வான் பொதுளும் புல்லைநகர்த்
தோன்றல் வருக பசுஞ்சூட்டுத்
தோகை விரித்து நடஞ்செய்மயிற்
றுரங்கா வருக வருகவே. (கo)

வருகைப்பருவம் முற்றிற்று.

---

## அம்புலிப்பருவம்.

செங்கமல முகமா றுறத்தோன்ற லான்மிக்க
தெண்ணிலாப் புன்னகை யினாற்
திருவல்லி முகமலர மலருவித் தங்கவுட்
டிகழுமுத் தந்தரு தலாற்
கங்கையொடு குலவிமான் மருமானெ னப்படுங்
காட்சியாற் சூரனோ டக்
கனகமணி வடவரையின் மொய்ம்பின்வல மருவலாற்
கவினுமொண் வேலை யார்ந்து
பொங்குசின வரவம் பிடிக்கலா லந்தரப்
புலவர்களி னொருவனெ னலாற்
பொற்புமிகு கற்கடக வேந்தென்ன லாலெங்கள்
புங்கவனு நீயுமொப் பாம்
ஐங்கரற் கிளவலென வந்தநற் குமரனுட
னம்புலீ யாடவா வே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே. (க)

கனிதரப் பரமனை விரும்பித்து திக்கையுறு
கடவுண்மா வுடனு தித்துக்
கவினுநற் குணவாரி யுற்றுமே லாசையங்
கடன்மூழ்கி முன்னமொரு நாள்
வனமருவு பொற்பூங் கொடிச்சிற் றிடைச்சிமேன்
மயல்கொடு கொடுஞ்சா பமும்
வாங்கியக் கணமங் கிராதவொளி யுருவாகி
மண்டலம் பரவவர லாற்
றனையொக்கு மென்றே நினைச்சுட்டி வாவெனத்
தானழைக் கின்றபொ ழுதே

தனியனானேமெனக் கருதிவா ராதினுந்
தாழ்ப்பதெவ னீசொற் றிடா
யனவரத மடியர்மன வனசமுறை சரணனுட
னம்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே. (உ)

கண்டபே ரண்டத்தி னுலவிவரு வாயிவன
கண்டவெளி யுருவா னவன்
கண்ணுதன் முடிக்கண் கிடப்பையம் முடியிவன்
காறுவைத் தாடுமிட மாம்
துண்டவெண் பிறையெனக் கிளர்வையெவ ரினுமிக்க
தூயபரி பூரண னிவன்
சுகதுக்க மனவரத முடையனீ யிணையற்கொர்
சுகதுக்க மென்றுமிலை யா
லெண்டருஞ் சோடச கலைக்குமீ றுடையனீ
யெண்ணில்கலை முழுது முள்ளா
னிரவினித் தந்திரிவை யிவனிராப் பகலற்ற
விடமுறைந் தருள்வ னதனா
லண்டர்பணி கின்றவனை நேரா யழைக்கினிவ
னம்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே. (௩)

வட்டவடி வத்தம் பரத்துலா யொண்கிரண
வருடம் பொழிந்து சிதமார்
மதிக்கலை யுருக்கிநீ ருகுவிப்பை யையனெ
மனக்கலை யுருக்கி விழியிற்

கொட்டமிக் கானந்த பாட்பரீ ரைப்பெருக்
குவனமுத முதவுநா ளீ
கோளுரைத் தொருகோ ளிடர்ப்பட்டை யினையனைக்
கோள்செயிட ருந்தவிர் ப்பன்
உட்டகவி லர்க்கரிய வுருவாயி னுனிவற்
கொருசிறி து முறழாய் நித
மும்பர்பதி யைப்புரி தியற்றியணி செயினுமிதை
யொக்குமோ வென்னவழ கார்ந்
தட்டலக் குமிமருவு புல்லைமுரு கேசனுட
னம்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே. (ச)

குலவுநின் மரபினுக் கிரவழுதி யாவரு
குலாபிமா னங்கரு தியோ
குடிலத்தி னத்தன்வேய் மாலைபின் விசிட்டமிக்
கூர்ங்கண்ணி யெனவுன் னியோ
வலகுபுகழ் புகழினுக் குவமிக்கும் வத்துவென
வோகைநெஞ் சிற்பொங்கி யோ
வுபயநா யகியர்தங் திருமுகத் திற்கிடந்
தொளிருவா மதியென் னவோ
சலதியை யுழுந்தெலைத் தாகப்பு ரிந்துண்ட
தமிழ்முனிக் கருளுமெங் கள்
சற்குருக டாட்சம்வைத் தனைவருக வென்றனன்
சமையுமா தவமென் கொலோ
வலகையுயிர் முலையினெறி நுகருமரி மருகனுட
னம்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே. (ரு)

களங்கனென் றுலகோ ருரைப்புகல்வ ரிவனெக்
களங்கமு மகன்றதா யோன்
* கள்வனிற் குடிகொண்டு பணிவாயுண் மெலிவையக்
கள்வனிவன் மனையர் சாறு
வளங்குல வெழிற்கொல்கி டுங் † குகுவி னின்கலை
வழிப்பறி பறிக்கவொவ் வோர்
மதியிலா தவர்தமை யடுப்பையிவ ணுயிர்தொறு
மதிக்குமதி யானவன் காண்
விளங்கர சிளங்குமரர் மறுகுலா வருமிரத
மெல்லியர் பிணங்கி நீத்து
விசுசெம் மணியணிப் பணிகளை யறைப்பவவை
மேயசெந் துகளதாய் விண்
ணளந்து செவ்வானநிக ரும்புல்லை முருகனுட
னம்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே. (௯)

முப்புவன மன்றியெப் புவனமு நினக்கேவன்
முறைசெயச் செய்தருளி நின்
மூளியுரு மாறியென் றென்றைக்கு மீளிகொளு
முழுமதி யெனப்புரி குவன்
செப்பினொரு பரிகார மில்குருத் துரோகமுந்
தீரக் கடைக்கணிப் பன்
திக்கெங்கு மோடித் திரிந்துழலு நின்றொழிற்
சிரமந்த விர்த்தாளு வன்
துப்புறழு மேனிப் பரன்குரூஉச் சடிலந்
துலங்கிவாழ் பதமுமொரு காற்

---

* கள்வன்; இல் - கற்கடகவீடு. † குகு - அமாவாசை.

சொற்றவறி நீப்பினுந் தனவா துறற்குறுதி
சொற்றிடுவ னுதலா லென்
னப்பனிீனை வாவென விளித்தபொழு தேயிவனொ
டம்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே. (எ)

நன்மையிவை தீதிவை யெனும்பகுத் தறிவின்மை
நாடினைகொ லிவனருள் பெறின்
ராசயோ கம்பெறுவை கபரோகி யென்னுமொரு
நாமமுந் தவிர்வை யென்றுந்
தொன்மையா வருமசுர பகையச்ச மியாவுந்
துரந்திடுவை நின்னின் மிக்கார்
சொல்லின்வே றெவனுமிலை யதிசயத் தம்பர்
துலங்கிட நிறீஇயா ளுவாய்
பன்மையுள வேதோப நிடதங்க ளன்மைமொழி
பற்பல பகர்ந்து பரவிப்
பற்றுத லுறுமைகன் டின்னமுந் துருவெங்கள்
பகவன்ற னுறவு வேண்டி
னன்மைநிக ருங்குழற் கொம்பிருவர் பங்கனுட
னம்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே. (அ)

உயர்திணைப் பொருளன்றி யஃறிணைப் பொருளுமா
யுடையமுப் பாலு மாகி
யுணர்தன்மை முன்னிலை படர்க்கையா நாமாதி
யுயிர்கள்பற் பலபேத மாய்
மயலுறுங் திணைபா லிடம்வேற்று மைத்தொகையின்
வடிவங் கடந்து மேலாம்

வாசாம கோசரப் பொருளாய பிரமமே
மகிதலத் தன்ப ருப்பப்
புயமாறி ரண்டாறி ரண்டுகரு ணைக்கொண்டல்
பொழிவிழிக் கடைவாரி சம்
பொலிசண் முகத்திருக் குமரனு வருமறைப்
பொருளையறி யாதயிர்க் கு
மயலைநிக ளந்தரித் தனைநிலையு மாற்றுவ
னப்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே. (௯)

சிறுமதலை யெனவெள்ளி யெக்கழுத் தங்கொடு
திரிந்திவன் வாராமை நோக்கித்
திகழுநவ வீரர்களி னொருவனை விடுத்துனைச்
சிக்கெனத் தனிகொணர்ந் தே
நறுமதலை வேளியனும் வந்துபல நயமொழி
நவிற்றினும வேண்டு கோட
னயவா துனைச்சிறையி லிடுவனஃ தன்றிமா
னரகேச ரிப்படி வமா
யுறுமதலை தன்னின்வந் தாடகனு ரங்கீண்
டுயிர்ப்பலியை வாங்க லொப்ப
வுனதுயிர் குடிக்கவே லொன்றுடைய தாகலா
னொருதர மழைத்தபொழு தே
யறுமதலை யாகியா ருரன்முலை யுண்டவனொ
டம்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே. (௧௦)

அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

## சிற்றிற்பருவம்.

காவிற் பொலியு மலரரும்பின்
கட்டு நெகிழ்ந்துந் தாதளைந்துங்
கானம் புரிந்துஞ் செழியநறுக்
களிகொண் டருந்து மதுகரஞ்சூழ்
பூவிற் பொலியும் படிசிறந்தும்
பொறிவண் டுச்சிட் டக்கலமாப்
புலரா விருளிற் புலர்ந்தலரிப்
போதின் மலர்செம் பதுமமொவ்வாக்
கோவிற் பொலிந்தெம் பிராட்டிதனக்
குவடு மெம்மான் புயத்தனித்தின்
குவடுஞ் சுவடு படவாடல்
குயிற்று மணித்தான் மலர்நோவத்
தேவிற் பொலியுந் தேவெளியேஞ்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (க)

இந்தக் கடல்சூழ் புவனமெலா
மெமையே பேதைத் தனமுடையா
ரெனலும் பெண்க ளெனிற்பேயு
மிரங்கு மெனலுஞ் சரதமன்றோ
சந்தத் திருநான் மறைமுடிவே
சாற்றற் கரிய வருள்வடிவே
சாரன் படியார் செயுந்துதியே
தன்னை யுணர்ந்தா டயாநிதியே
யுந்தைக் குரிய சந்ததியே
யுயர்வொப் பிலாத பழம்பதியே

யுபயக் கரங்க ளிடையவளை
　　யுடையப் புரிந்தே மையவிஃதைச்
சிந்தச் செயினி னருட்கழகோ
　　சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
　　சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (உ)

பேய்த்தேர் * நிலையின் பிரபஞ்சப்
　　பித்தைத் துடைத்துன் சரண்மலரே
பேணுந் தொண்டர் பழவினையாம்
　　பிணியைத் தணிக்கு மருமருந்தே
வேய்த்தோ ளுமைசி ராட்டிநிதம்
　　விரும்புங் கரும்பே மகபதியான்
மிலைச்சும் பொற்பூந் தாரணிந்த
　　விறற்சிங் கேறே யமைக்கவொணு
வாய்த்தான் சமைந்த செழும்பாகே
　　வடிவேல் விடுத்துச் சூர்மாவின்
மறுவில் வாழ்வும் புயவலியு
　　மணித்தேர் வலியும் பின்வாங்கச்
செய்த்தே ழகத்தா ரோகணித்தோய்
　　சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
　　சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௩)

மூனந்தத் தைய தையவென
　　முரணிற் கெழுமு முயலகன்றன்
முதுகிற் புலியும் பதஞ்சலிமா
　　முனியுங் காணப் பொதுநடஞ்செய்

---

* பேய்த்தேர்—கானல்.

தனந்தப் பணியோ டிலகியவா
ளனந்தம் பணியும் புனைந்தடியா
ரனந்தம் பணிக்கே யருள்புரியு
மம்மான் மதலாய் பொய்மானு
வனந்தத் துறச்சென் மாரீசன்
மறுகத் தெறுமான் மருமானே
வனக்குஞ் சலதி சுவறிடவே
வடிவேல் விடுத்த பெருமானே
தினந்தத் தைகள்சூழ் பொழிற்புல்லைத்
தேவே சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (ச)

முருகு பருகி யளிமுரன்று
மூசும் பசுந்தண் படலையம்பான்
முடித்துப் பணிபற் பலதிருத்தி
முடங்கொண் மதியிற் களங்கமெனக்
கருகுந் திலக வாணுதலுங்
கனிவாய் முறுவற் றளவரும்புங்
கவினப் பொற்பூந் துகின்மருங்குல்
கதுவப் புனைந்தா வணமருங்கி
னருகுற் றுகந்து மனற்சோறட்
டாடற் கமைத்தே மகிற்பொறிதெவ்
வனைத்துங் கடந்து செயசங்க
மார்த்தா லெனச்சங் கொலிகிடங்கிற்
றிருகு சினமா வுழக்குபுல்லைத்
தேவே சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (ரு)

அண்டத் தலைவைந் தருநிழற்கீ
  ழுயர்வா னமுதா சனர்தினைக்கு
மாம்பைக் குழவுக் கனிகலம்போ
  லார்பொற் படிவச் சசிமுதலோர்
கண்டத் தொளிர்மங் கலநாணின்
  காசில் யாப்புக் கழலாமே
காக்கும் வடிவேற் படைத்திறமுன்
  கருணைத் திறமோ வெடுத்துரைப்பேம்
வண்டார்க் கொதுங்கு மாகரமா
  வளர்தண் பொழிற்பூ ரணைக்குவைகண்
மருத நிலப்பெண் மகட்குழூஉ
  வதுவை யாற்றற் கமைத்தமலர்ச்
செண்டிற் பொதுளுஞ் சோணாடா
  சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
  சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௬)

தாட்டா மரையிற் சுருளருந்தித்
  தழையுஞ் சிறக ரொடுக்கிநறுந்
தண்பூஞ் சேக்கை மிசைத்துஞ்சுந்
  தவள வனமே னைமிசையும்
பாட்டா ரளிகண் * மூழ்க்கவதைப்
  பாய்வெஞ் சுறவு தாக்கவஞ்சிப்
பரவச் சுரும்பர் தணங்தேகப்
  படரு மெகின்வான் மீப்போதல்
விட்டா வளவில் பலந்தவத்தான்
  விட்டிக் கதிமேற் செல்வாரின்

* மூழ்த்தல் - மொய்த்தல்.

விளங்கத் தோன்றும் படிசிறந்து
மேவுந் தடஞ்சூழ் சோணாடா
திட்டா மறைக்கு மரிவரியோய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௭)

பணிகைக் கொளிர்கங் கணமெனக்கொள்
பரம யோகிக் கருமறையின்
பயனைத் திருவாய் மலர்ந்தருளெம்
பகவ நினக்கெப் பொருளரிதாங்
கணிநற் றருவெங் கிராதனுமாய்க்
காமர் வடிவந் திரிந்துகிழக்
காயந் தரித்துக் குறமினையற்
களவிற் கற்பி னியலழித்த
துணிவிற் புரிசிற் றிலுமழிக்கத்
துணிந்தாய் கொல்லோ தழுகோநீர்ச்
சுழிவெற் பொடுகை வரையுருட்டுஞ்
சுவேத நதிசூழ் சோணாடா
திணிநற் புயமீ ராறுடையோய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே.
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௮)

வண்டா னஞ்சூழ் வலிகடக்க
மாட்டா னெனில்பார் வல்லரந்தோ
மதியும் விதியின் வழியன்றி
மருவா வெனுநூல் கற்றுணர்ந்து
கொண்டார் தமக்கு மல்லவர்க்குங்
கூறற் கரிய பேரின்பங்

குலவற் குனதின் னருளிலையேற்
கூடா வெனலும் பொய்யாமோ
கன்டா னைய நின்மாட்சி
கழறற் பாற்றோ நான்முகனுங்
கருதற் கரிய புகழ்ப்புல்லைக்
கருணைக் கடலே வெற்புடைத்த
செண்டா யுதக்கைத் தலமுடையோய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (கூ)

எழுநா விழியற் குனையீன்ற
வெந்தா யிமையா சலக்கொடியும்
இன்னு மொழியு முருகுநின்னு
வின்சொற் குதலை செவிமாந்தி
வழுவா தியம்பக் கேட்டுவகை
மனங்கூர்ந் துனது முகநோக்கி
வாவா விருகண் மணியெனக்கூஉய்
வாரி யெடுத்து மார்பிறுகத்
தழுவா நின்ற நின்திருமெய்
தனிவித் துருமா சலத்தொருசார்
தயங்கு மிளம்பா னுவினுதயந்
தனையே யிவணைப் பிறங்கிடுமாற்
செழுமா நீபத் தடந்தோளாய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (கഠ)

சிற்றிற்பருவம் முற்றிற்று.

---

## சிறுபறைப்பருவம்.

மகிதலம திக்குமர வமணிகள்கு யிற்றியொளிர்
　　மணிமகுட வர்த்தனர் குழாம்
மகரதர் நெருக்கமுய ரதிரதர் வருக்கமொடு
　　வருசம ரதத்தரு டனே
நகுகுருகு லத்தரசர் பகையதிக ரித்துவர
　　நவினிருநி றத்தரு முனை
ரைபலிகொ டுத்தளவில் பலபடையெ டுத்தமமர்
　　நடைபெறுக ளத்தளவ ளாய்
முகின்மழையெ னக்கணைகள் விடவிழியி லிக்குரிய
　　முதன்மகன்மு தற்படை யெலா
முடியவிசை யத்தொடைய லணியவைவ ருக்குதவு
　　முசலியிள வற்கும ருகா
சிகிமுதுகி னிற்பவனி வருசரவ ணப்பெரும
　　சிறுபறைமு ழக்கி யருளே
திசைதிசைமு கத்தளவு குமரமலை யிற்குமர
　　சிறுபறைமு ழக்கி யருளே. (க)

அருணகம லக்குலமொர் சிறிதுமுற ழற்கரிய
　　வணியதுப டைத்த கரநீ
டதிமதுர முத்தமிழி னிடையிடைத மிழ்ப்புலவ
　　ரகநெகவர் னித்தகர மேன்
மருமருவு கற்பகமென் மரநிழலி னிற்குலவி
　　மகபதிமு தற்சொல்புல வோர்
வதியவசு ரக்குழுவின் வழிமுதல றச்செருவின்
　　வருமயிலெ டுத்தகரம் வான்
றரைசொல்கர டத்தறுகண் வெளிறுமெயு டற்றும்விழி
　　சதுர்நெடும ருப்பரசு வா
தருசுதைம ணத்தினுயர் விதிவழிபி டித்திடுகை
　　தகவினொடு குற்றடிமை சேர்

திருவடிய ருக்கருளு மபயவர தக்கைகொடு
சிறுபறை முழக்கி யருளே
திசைதிசைமு கத்தளவு குமரமலை யிற்குமர
சிறுபறைமு ழக்கி யருளே. (உ)

கமகமவெ னக்கமழும் வனசமல ருற்பலநி
கழுநறைநி றைத்தொழு கவே
கழனியின்வி டுப்பவரு பயனையுற நட்டபயிர்
களைவளரு வித்துத வியே
யமைதரவி யற்றுமென வதுபுகலி னற்பர்பெற
லருமுதவி யைச்செ யினுமே
யவருறவு மிக்கமிகை யெனவிடுவர் கற்றறியு
மறிஞரென வுட்கரு தியே
தமனியவ ரைக்கனைய தனதடவு முத்தியர்க
டருகளையெ னக்களைகு வார்
தழுவும்வள வப்பைதிர மதிலுயர்வ ளப்பநனி
தழைதருதி ருப்புல்வய லாய்
திமிதிமிதி மித்ததிமி தனைதனைத ணைத்தவென
சிறுபறைமு ழக்கி யருளே
திசைதிசைமு கத்தளவு குமரமலை யிற்குமர
சிறுபறைமு ழக்கி யருளே. (௩)

மறைபயின்ம றைச்சிறுவர் சுருதிகளி சைக்குமொலி
மருவுமில றத்தர்ம றுகே
வருமதிதி யர்க்கமுது தரவுபச ரித்தவரை
மனைவரவ ழைக்குமொலி நீள்
கறையடிம தக்களிறு நிழலொடுபொ ரப்பிளிறு
கனவொலியு ளைத்தின்வய மாக்
கடவொலியி யக்கிரத மணிநிரைக லிக்குமொலி
கவிஞர்கள்ப டிக்குமொ லிசேர்

குறையறாத வத்தடிய ராகரவெ னச்சொலொலி
குருதர்மக தர்க்கதி பர்ளாழ்
குடகர்வடு கர்க்கிறைவ ரெவரும்வள வர்க்கரசு
குலவுமணி முற்ற மிசையே
திறையினைய ளக்குமொலி விரவுபுல்வ யற்கிறைவ
சிறுபறைமு ழக்கி யருளே
திசைதிசைமு கத்தளவு குமரமலை யிற்குமர
சிறுபறை முழக்கி யருளே. (ச)

கரையறு தரங்கக் கருங்கடற் கலையுடைய
காசினிக் கிருகண் மணியாக்
கதிக்குமுயர் குன்றைப்ப திக்குளோ ரன்பன்
களேபரத் துற்றகுடர் நோய்
பிரிவறவ ரந்தையுற் றஃதகல நின்தருட்
பிரசாதம் வேண்டி யுனதாள்
பேணத் தெரிந்துநந் திருமுனர் மணிக் * காப்
பிரார்த்தனை செலுத்தென் னவே
யுரியபே ரன்பொடு மியற்றப் பெருங்கருணை
யுகளக் கடைக்க ணமுதா
மோவா மருந்தருளி யொருவாத வன்பிணியை
யொருவித்த பரம குருவே
திரிவித குணாதீத சுத்தநிட் களரூப
சிறுபறைமு ழக்கி யருளே
திசைதிசை முகத்தளவு குமரமலை யிற்குமர
சிறுபறை முழக்கி யருளே. (ரு)

வேறு.

கண்டலின் வண்டலெ லும்படி சிந்திய
கம்புளின் முத்தமு நீள்

---

* கா - காவடி.

கந்தடு குஞ்சர மொன்றிய கொம்பு
கழன்றுகு நித்தில மும்
ஞெண்டுல கந்தொடு விண்டுவும் விண்டு
நெகிழ்ந்த மணித்தொ கையும்
நின்று கலந்து கிடந்தொளிர் கின்றது
நீனில வுதயமெ னத்
தெண்டிரை கொண்ட கருங்கடன் மண்டு
செழும்புன லுண்டு நபஞ்
சென்றுப டர்ந்துதி ரண்டுதி ரண்டு
செறிந்து பொழிந்து மழைக்
கொண்டன் முழங்கிடு புல்லைவ ரும்பதி
கொட்டுக சிறுபறை யே
கொற்றவ யிற்கும ரச்சிலை யுற்றவ
கொட்டுக சிறுபறை யே. (௬)

முச்சுடர் முக்கண் முதற்கட வுட்கொர்
முதற்படு பிரணவ மா
முற்பொரு ளோத்தெரி வித்தகு ருக்கண்
முகத்தருள் விழியுடை யாய்
இச்சக மற்றுள வெச்சக முற்றினு
மிச்சக மொடுபுகழ் வோய்
இக்குவி லிக்குயர் மைத்துன * செச்சை
யியக்குறு மழகளி றே
† கச்சப மொத்த புறத்தடி மைக்குழல்
கட்கய லகலிகை யாய்க்
கற்சிலை யைச்செய் பதத்தர் மகிழ்ச்சி
கருத்தெழ வருசுதை யாங்

* செச்சை - ஆடு. † கச்சபம் - ஆமை.

கொச்சை மொழிக்குபி லைப்புண ருத்தம
கொட்டுக சிறுபறை யே
கொற்றவ யிற்கும ரச்சிலை யுற்றவ
கொட்டுக சிறுபறை யே. (எ)

நவமணி யருள்சிறு மியர்சுத ரொடுமிள
நடைபயில் பொற்ப தனே
நளினசு முகசசி மகபதி சுதையிரு
நகில்புணர் கற்பு யனே
தவரிணை நுதலுமை விழிமணி யெனநினை
தவம்வரு புத்தி ரனே
தருவர்கள் குலமுழு வதுமற வமர்புரி
தருமொரு சத்தி ரனே
அவிருமி ரவிகளி ரறுவரை நிகர்குழை
யணிகொள் செவித்த லனே
அனவர தமுமன லிடுமெழு கெனவுரு
கடியர கத்த லனே
சிவகுரு பரசுக மருள்பவ னெனவொலி
சிறுபறை கொட்டு கவே
திருவ மிகுத்திடு குமரம லைக்கிறை
சிறுபறை கொட்டு கவே. (அ)

* கானின் வாழைக் கனியொடு மாவின்
கனியும்வி ருப்பமு றுங்
காமரு மேனிக் கோமள செல்வக்
கடவுளர் நாய கமே
மானின் மானக் கயல்விழி கூறும்
மடவியர் நட்புற மெய்

---

* கானின்வாழ் ஐ கன்னி - வள்ளிநாயகி;
மா இன் கன்னி - தேவகுஞ்சரி.

வாடியு கேடித் திரை கெய்தும்
வகையுற வேநினை யே
கோனென் பாரைப் பரகதி சேர்மின்
குறைக டவிர்ப்பி ரெனக்
கூரிய ஞானப் பேறருள் சைவக்
குலமொளிர் திப கமே
தேனின் னீபப் புயசயி லேச
சிறுபறை கொட்டு கவே
திருவ மிகுத்திடு குமரம லைக்கிறை
சிறுபறை கொட்டு கவே. (௯)

தனுர்விஞ் சையினொரு விசையன் பொருவிய
தனுர்விஞ் சையின்வல ரும்
தனதன் றனைநிகர் தனவந் தருமகி
தலையொன் றரினின் விற்
பணமிஞ் சறிவினர் களுமொன் றலினொளிர்
டகலென் றுறழ்பிர தா
பழுமொன் கலைமுழு மதியந் தனையிணை
பரவும் படிபுக ழும்
நனிதுன் றிடுதவ முனிபுங் கவனென
நவிலுஞ் சனகனின் ஞா
னமுமன் றியுநில வளமும் புனல்வள
நலமுஞ் செறிவள மும்
தினமொன் றுபுல்வயல் வருசுந் தரகுக
சிறுபறை கொட்டு கவே
திருவ மிகுத்திடு குமரம லைக்கிறை
சிறுபறை கொட்டு கவே. (௧௦)

முத்தப்பருவம் முற்றிற்று.

கருணைப் பெருந்தே ருகைத்துநீ வந்தஞ்ஞா
　　கனலென்னுந் தூண நட்டுக்
கவினிருந் தட்டுவின் மன் * கூவி ரம்யோ
　　கமாமுறுதி யச்சி ணைத்துப்
பொருவிலைம் பொறிகறங் குருளுசி நடுவெனும்
　　பொற்பீட மேலமைத் துப்
புந்தியென் கின்றபா சம்பிணித் திடுமனப்
　　புரவியாத் திட்டொர்நெறி யிற்
பரிபக்கு வப்பாகன் விடுதவத் தேருரு
　　பவர்சிவன் முத்தரா கப்
பகர்சோ தனைப்போர் புரிந்துஞா னுக்கினிப்
　　பகழியை விடுத்து மனையார்
† திரிபுரத் தைத்தகித் தருள்பரம யோகியே
　　சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமராசலத் திறைவ
　　சிறுதே ருருட்டி யருளே. (க)

நாலைப் பெரும்புன லுடுத்தபுவ னக்கொடியி
　　னறுநுதற் றிலக முறழ
நண்ணுதய வெற்பி ‡ னிருள் வலியெழவு மன்பதைக
　　ளளினத் தடந்த ளியினர்
பொருவிலிமை யெனுமிணைக் கதவந் திறந்திடப்
　　பொலிமணிப் பாவை யன்பர்
புந்திப் புலத்தைத் திருத்திவிளை வித்தமெய்ப்
　　போதக் கரும்ப ரும்பும்
இரசமிப முழைமகளிர் விழையுமின் பத்தேன
　　லெழின்மதுர கவிபொழி யுமோ

* கூவிரம் - தேர்க்கொடிஞ்சி.

† திரிபுரம் - தூல, சூக்கும, காரணம். ‡ இருள்வலி - சூரியன்.

ரியற்களின துயிருய்ய வருளுங்கரு பாமுத
மெனத்துதி யவர்க்க ழிவிலாத்
திருவும் பெருங்கல்வி யறிவுந் தருங்குழக
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே. (உ)

மாமேவு வீபச்செ ழுந்தார் மணித்தோளின்
வரைநின்றெ ழும்பிரதா பம்
வான்கதி ரெனத்தோன்றி நிலக்க டாவூர்தி
வச்சிரவ ளைன்க னலிநீள்
காமேவு வைதூரி யக்கணபி ராணிமகிழ்
காவலன் மருத்து நிருதி
கடலிறை முதற்றேவர் முககமல மோடகக்
கமலமலர் தரவோங் குபொற்
* கோமே தகச்சு ரெனுந்திமிர மகலநறை
குளிர் † புட் பராக யலர்சேர்
குழன்முத்த நகையிமய மரகதக் கொடிபடரு
கொழுகொம் பெனத்திக ழுமோர்
சேமேவு பவளவரை தந்தமா ணிக்கமே
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினு யர்குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே. (௩)

வீறுபடு சைவமென் பதினெற்று விட்டுமுன்
மேலெழுத் தந்தம் வைத்து
விரவுமொழி யொன்றுபர சமயத்தை முற்பாதம்
வினவிமு னெடுத்தமொ ழியிற்

---

* கோமேதக-தேவருலகம் மேன்மையடைய. † புள் - பராகம் வண்டுகளையுடைய பூந்தாது.

கூறுபடு முன்னெழுத் தாட்பொருளி னைக்கண்டு
கூறியறி ஞோருய்ய வக்
கோதுறு புறச்சமய * வுற்பாத மாய்த்தெவ்வு
கொண்டுசிவ சமய மோங்கத்
தாறுபடு கந்திக் குலத்தரம் பைக்குலத்
தாறுகண் முதிர்ந்த கனியின்
சாறுகுத் தம்பரம ளந்தழ கியற்றவளர்
தண்டலைகள் சூழ்கா ழியிற்
றேறுபடு கவுணியர் குலத்துதித் திட்டவா
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே. (ச)

உதகம்விடு ஞெகிழியு மிருந்தையா குறல்போலும்
உறையிடுங் கிரமெ னவும்
ஒளிர்தரும் பொன்னிற் பொலிந்தும்வரு சஞ்சலத்
துறுபுணர்ப் பின்றரத் தாற்
குதிகொண்டு டன்னெறியி லும்புக்கு மனமாங்
குரக்கைகின தாணை யென்னுங்
கொடியபா சங்கொடு பிணித்துமுன் செய்வினைக்
கோல்கொண்டு தட்டி யாட்டித்
ததிகண்டு தனுகரண புவனபோ கங்களைத்
தானுண வருத்தி மீட்டுச்
சாரங்கம் வெளவாவி காட்டல்போன் மானிடச்
சட்டைபூண் டுயிர்க ளுய்யத்
திதிகொண்ட சற்குருவின் வடிவமாய் வருபெரிய
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே. (ரு)

---

* உற்பாதம் - துன்னிமித்தம்.

நிருத்தேவ ராதியர் செருக்குந் தயித்தியத்
தலைவரா கியமுப் புரத்
தானவர் செருக்குமழி யச்செருப் புரிகாதை
சாற்றினகை யாகுமெ னவே
மருத்தே னளிக்கமல வாசமறை வாசிவிடு
வலவன்மா மகிழ்வ லவனே
மருவலவ னிரவியே யுருளாழி * வங்கூழ்
மணிக்கறங் குலவு பாசம்
பருத்தேர் படைத்தா யிரத்தெட்டு முடியுடைப்
பைம்பான சலங்கார் முகம்
பணங்கிளரும் வாசுகி குணங்கவன மால்விடைப்
பரியூர்தி யாக்கொண்டு பார்த்
திருத்தே ருருட்டிவரு செம்மலுக் கிளையசேய்
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே. (௬)

பாரோடும் வானப் பரப்போடு நீடும்
பதாகைநுதி மதித ழுவலிற்
பலமனர் மதிக்கவிகை நிழலிருந் தரசியல்செய்
பரிசின்மா டங்கொள் புல்லைத்
தாரோடு கிம்புரி மருப்போடு குத்துமூட்
டாறுபாய் கவுளோ டுவின்
டருக்கோடு சாயச் செருக்கோடு போமுரற்
றுன்முறச் செவிமத் தமாக்
காரோடு தெண்டிரைக் கடன்மடை திறந்தெனக்
கவிழ்தான மோடந் தனைர்
கைத்தான மோடறம் வளர்ப்பா ருகந்துவிடு
கைத்தான நீரோடு பொற்

* வங்கூழ் - சாற்று.

தேரோடு பரியோடு தெருவோடு நீமணிச்
  சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
  சிறுதே ருருட்டி யருளே. (எ)

கொக்கிற கணிந் * தரி மதிக்கொக்கி னுன்மறைக்
  கொக்கேறு கூடலிறை சேய்
கொக்கைப் பிளந்தொகர மாவரா கத்தூர்ந்து
  குக்குடங் கொடியா கவேய்ந்
தெக்குலத் தினுமுள பசுக்குழா முய்ந்திட
  விடைத்தொழில் புரிந்துவ ணமார்ந்
தெண்குவினை யுண்டமான் மகளாய வல்லிய
  விருங்கா னடக்கு முன்றூட்
பொக்கெனக் கடமைப் படும்பத்தர் நிரயம்
  புகாவணை மெடுத்தா ளவே
பொலிதரும் பஞ்சா னனத்தோ † டதோமுகம்
  பூத்தகரு ணைக்கொண் டலே
திக்கெங்கு முவகைகூர் தரவுறு மிளங்களிறு
  சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
  சிறுதே ருருட்டி யருளே. (அ)

அம்பரா வேணிப் பரஞ்சுடர்க் காசிரிய
  வம்பரு வேணி யென
ஆதரித் தரைமே லுனைத்தொழார் நினையன்பி
  னுதரித் துப்ப ரவியே
யும்பரா குநரிம்பர் வாழ்வினொடு மன்றிவா
  னும்பர்வாழ் வெனினும் வேண்டா

---

* அரி மதி நொக்கு - ஆவணிமாதத்து மூலநட்சத்திரம்.
† அதோமுகம் - கீழ்நோக்கிய முகம்.

றன்னுபய சரணபங் கயநிழற் கிழமைபூண்
டொழுகவருள் புரியும் வள்ளால்
கொம்பரா கினியுலக மீச்சென்று கற்பகக்
கொம்பரொடு கூடிம கவான்
குலவியே யயிரா வதத்துலா வரமருகு
கொட்டுபொற் சுண்ண மொப்பச்
செம்பரா கஞ்சிதறு காமேவு புல்லையிற்
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே. (௯)

கூரோங்கு மதியெனு மருப்பெழுத் தாணிகைக்
கொண்டுமா றுயமூ டர்
கொடியநெஞ் சென்னுமிதழ் கீறிக் கவிப்பொருட்
குளிர்சுவைக் கவள முண்டு
பேரோங்கு நிறையெனுங் கந்துட் பிணிப்புண்டு
பீடுசான் முத்த மிழெனப்
பிறங்குமும் மதமழை பொழிந்தட்ட திக்குமொளிர்
பிரதாப மிக்கபு கழாந்
தாரோங்கு புலவப் பெருங்களிற் றுக்குழாந்
தழையவருள் ஞானம தமே
தங்குதெய் வப்புலமை யரசுவா வென்னவெத்
தாரணியு மேத்தெ டுப்பச்
ஓரோங்கு புல்லைப் பழம்பதியின் வந்தவா
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டிய ருளே (௧0)

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

குமாரமலைக் குமரேசர் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

# பரிசோதன பத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩ | ௪௫ | சுருதிப | சுருதிப் |
| ௧௩ | ௨௨. | ருக | வருக |
| ௧௪ | ௬ | சிறுபறைப்பருவம் | சிற்றிற்பருவம் |
| ௰ | ௮ | சிற்றிற்பருவம் | சிறுபறைப்பருவம் |
| ௨௮ | ௧௭ | செங்கீரை | செங்கீரை |
| ௪௧ | ௨௬ | சப்பணி | சப்பாணி |
| ௪௩ | ௨௫ | வாரால் | வரால் |
| ௪௫ | ௨௫ | வாளனுங் | வளனுங் |
| ௫௦ | ௧௩ | ஞானப | ஞானப் |
| ௫௩ | ௮ | காளறுங் | காறுளங் |
| ௫௭ | ௮ | வரையிண் | வரையின் |
| ௭௪ | ௨௮ | முத்தப்பருவம் | சிறுபறைப்பருவம் |
| ௭௮ | ௧௧ | பைம்பானசலங் | பைம்பொனசலங் |